201

REG. NO. M. 2997.

தனிப்பிரதி அணா 1

RÉPUBLIQUE FRANÇAISE

LIBERTÉ.—ÉGALITÉ.—FRATERNITÉ.


ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

LE RÉDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI.
Tamil Pandit
Jaffna
CEYLON.




# VITTAGAM

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, NO. 2,
Pondichery.


நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.
குறள்.

காரியாலயம்:—
அம்பலத்தாடு ஜயர் மடத்து வீதி,
நெம்பர் 2,
புதுவை.

VOL. II. | புதுவை, யுவ ஷூ வைகாசி மீ கஎ உ (30—5—35) | NO. 27.

## திருமந்திரம்.

தானே யெழுந்தவித் தத்துவ நாயகி
வானே ரெழுந்து மதியை விளக்கின
டேனே ரெழுகின்ற தீபத் தொளியுடன்
மானே நடமுடை மன்றறி யீரே.

அறிவான மாயையு மைம்புலக் கூட்டமு
மறிவான மங்கை யருளது சேரிற்
பிறியா வறிவறி வாருள்ளம் பேணு
நெறியாய சித்த நினைந்திருந் தாளே.

இரவும் பகலு மிலாத விடத்தே
குரவஞ்செய் கின்ற குழலியை நாடி
யரவஞ்செய் யாம லருளுடன் றூங்கப்
பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே.

நின்ற பராசத்தி நீள்பரன் றன்னொடு
நின்றறி ஞானமு மிச்சையு மாய்நிற்கு
நன்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே
மன்ற னவற்றுண் மருவிடுந் தானே.

மருவொத்த மங்கையுந் தானு முடனே
யுருவொத்து நின்றமை யொன்று முணராக்
கருவொத்து நின்று கலக்கின்ற போது
திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றனே.

சிந்தையி னுள்ளே திரியுஞ் சிவசத்தி
விந்துவு நாதமு மாயே விரிந்தனள்
சந்திர பூமி சடாதரி சாத்தவி
யந்தமோ டாதிய தாம்வண்ணத் தாளே.

உ

திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.

[திருவாசகம்]

# வித்தகம்

புதுவை

யுவ ஸு வைகாசி மீ 17 உ

## குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை.

ஔவையார் அருளிய "கொன்றைவேந்தன்" என்னும் தமிழ் மந்திரக் கொத்துள் ஒன்றாகி மிளிரும் இவ் அமுத வாக்கியம் உலகியலுக்கும் உண்மை நிலைக்கும் ஒப்பிய பொருளை உடையது. அஃது அன்னதாதல் ஈண்டு ஒரு சிறிது கூறப்படுகின்றது.

பிறர் குற்றங்களையே ஆராய்ந்து கண்டு கொண்டு இருந்தால் நமக்கு உறவாவார் ஒருவரும் இல்லை என உலகியலுக்கு ஒப்பிய பொருள் கூறப்படுகின்றது. குற்றம் என்றால் என்னை? அதுதான் குறை என்று கூறப்படும். குறையே குற்றம் என்க. இவை குறுமை என்னும் பண்படியாகப் பிறந்த சொற்கள் என்ப. சீவர்களுள்ளே குறை இல்லாதார் — குற்றம் இல்லாதார் யாருமே இல்லை. குறையுடைமையே — குற்றமுடைமையே சீவ இயல் என்க. குற்றத்திற்குக் காரணம் யாது? எனின், அதுதான் குறைவுடைமையாகிய நிறைவு இன்மையே — நிறை இன்மையே என்று கூறப்படும். உலகத்திலே கொலை, களவு முதலிய குற்றங்களை — தீவினைகளை உஞற்றுவோர் என்று இகழப்படுவோர் எல்லாம் — குற்றவாளிகள் என்று அரச தண்டனைக்கு ஆளாவோர் எல்லாம் குறைவுடைமை ஆகிய அசுத்தமான அவாவுடையவரே ஆவர். குற்றம் என்பன யாவும் காமம், கோபம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் அறுவகையுள் அடங்கும் என்ப. குறைவுடைமை என்னும் குற்றமே இவற்றிற்கு அடிப்படையாகும். காரணமே காரியமாக உபசரிக்கப்பட்டு வழங்குகின்றது. நிறை இன்மையே குறை எனப்படுவது. அதுதான் நிறைபேதம் எனப்படுவது — அசுத்த நிறை எனப்படுவது என அறிதற்பாற்று. நிறைவுடைமையே சுத்த நிறை எனப்படுவது. அதுதான் அமல நிறை என்பது. சுத்தமும் அசுத்தமும் அபேதமாகக் கலந்து பிரிபடாது அசுத்த நிறையின் ஆதிக்கம் பெற்று இருப்பது இவ் அகிலம் அகிலமாகிய பிரபஞ்சம் என்க. இவ் அசுத்த நிறையே வியாபகம் எனப்படுவது — விண்டு எனப்படுவது — வியாப்பியத்தினின்றும் விண்டது — வியாப்பியமாகிய காரணத்தினின்றும் விண்டது — விரிந்தது என்க. வியாப்பியம் நிலைக்களமானது — நித்தியமானது. இதினின்றும் நிறை பிரிந்து வியாபகம் பெற்றதே அநித்தியமாகிய — தோன்றி மறைந்து திரிதலுடைய அகிலம் — பிரபஞ்சம் எனப்படுவது. ஆதலால் அது குறை என்னும் குற்றமுடையது — பங்கமுடையது — அழுக்குடையது — விஷமுடையது — விஷமம் என்னும் ஏற்றம் இறக்கம் உடையது என்க. இந் நிறைபேதமே அசுத்த நிறை எனப்படுவது. அசுத்த நிறையே பசு பாசம் — உடலுயிர் — சீவன் என்க. அசுத்த நிறையாய் விரிந்து தடித்த — தூலித்த பௌதிகங்கள் ஏற்ற இறக்கமாய் விஷமமாய் — திணைமயக்கமாய் இருப்பதே இருவினை சொரூபமாகிய உடலுயிர் சமப்படாது — நிறை தழுவாது — பூரணப்படாது — குறை மலிந்து குறை என்னும் குற்றம் மலிந்து இருப்பதற்குக் காரணமாகும். பௌதிகங்களின் நிறைபேதமே — திணை மயக்கமே உலகம் (உடலுயிர்) என்பது பின் வரும் பிரமாணங்களாலும் நன்று வலியுறுகின்றது.

### தொல்காப்பியம்.

"நிலம்நீர்தீவளிவிசும்பொடைந்தும்
கலந்தமயக்கம்உலகமாதலின்
........................................"

[மயக்கம் — திணை மயக்கம் — நிறைபேதம்.]

### கம்பராமாயணம்.

அலங்கலில்தோன்றும்பொய்ம்மை
அரவெனப்பூதமைந்தும்
விலங்கியவிகாரப்பாட்டின்
வேறுபாடுற்றவீக்கம்
கலங்குவதுஎவரைக்கண்டால்அவரென்பர்
[கைவில்லேந்தி
இலங்கையிற்பொருதாரன்றேமறைகளுக்
[கிறுதியாவர்.

["அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு என......வேறுபாடு உற்ற வீக்கம்" என்பது "ரஜ்ஜு ரூப அதிஷ்டானத்தின்கண் கற்பிதமாகிய சர்ப்பத்தின் அபாவம் அதிஷ்டானத்தின் வேறன்றும். மற்றே, அதிஷ்டான ரஜ்ஜு ரூபமாம்" என்னும் வேத உண்மையை உணர்த்தி நின்றது.]

"நேஹநாநாஸ்திகிஞ்சன"

[இவ் உலகத்தில் அநேகம் என்பது சிறிதேனும் இல்லை; ஆனால் பிரமம் ஒன்றே இருக்கிறது] என்னும் சுருதிப் படி அதிஷ்டான ஆன்மாவின் கண் சிறிது மாத்திரையும் துவைதப் பிரபஞ்சம் இன்றாம்; மற்றே, அதிஷ்டான ஆன்ம ரூபமாம். விரிப்பிற் பெருகும். ("வித்தகம்" தொகுதி 1 இல 46 இல் "பதி பசு பாசம்" என்னும் கட்டுரையில் காண்க.) இத்தகைய மெய்யுணர்ச்சி—நவையறுகாட்சி உண்மை நிலையை அநுபவமாகக் கண்ட மெய்யடியார்க்கே உரியது. உலக மாக்கள் இவ்வுண்மையை வாய்மையாக உணர்தல் முடியாத காரியம். இவ்வுண்மையை அறிய முடியாது படிப்பு வல்லபத்தால் வாதம் புரிந்து சாதலடைந்ததும் அடைவதுமே உலகியலாயிற்று. "பூதம் ஐந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்" என்பது பௌதிகங்களின் நிறை பேதத்தால் — திணை மயக்கத்தால் பல வேறு வகைப்பட அமைந்த — தடித்த — தூலித்த உடலுயிர்களை — சராசரப்பிரபஞ்சத்தை உணர்த்தி நின்றது. "கலங்குவது" என்பது மாற்றமடைதலை—இருவினை சமப்படுதலால் மல பௌதிகம் விமல பௌதிகமாகத் திரிதலை — குற்றம் என்னும் அழுக்கு நீங்கி — விஷமம் நீங்கிச் சமப்படுதலை உணர்த்தி நின்றது. "உற்ற ஆக்கையின் உறுபொருள்" ஆகிய எம் பெருமான் திருவடியைக் கண்டவர்க்கே இப்பெற்றி கைகூடப் பெறுவது ஆதலின் "கலங்குவது எவரைக்கண்டால்" என்று கூறப்பட்டது. "கைவில் ஏந்தி இலங்கையில் பொருதார்" என்பது "சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவனாவான்" (திருவாய்மொழி) என்னும் வேத வாக்கின் பொருளை உடையது. அமல ஐ இலங்கும் இடமே இலங்கை. அதுவே புகலிடம். உரிய சாதகங்களால் புகலிடம் புக்க மெய்யடியாரே மாற்றிப் பிறந்து—மும்மலம் நீங்கி — முப்புர சம்மாரம் செய்து — குற்றங்கள் குறைகள் நீங்கி நித்தியத்துவம் பெறவல்லராவர்.

பௌதிகங்கள் திணை மயக்கம் நீங்கி ஏற்ற இறக்கம் நீங்கிச் சமப்பட்டபோது —நிறை பெற்ற போது குறை இருக்க மாட்டாது. நிறை பேதமே குறையே —குற்றமே சீவர்கள் அவச்சலனமடைதற்கு — காமம் கோபம் முதலிய தீய குணங்களுக்கு ஆட்படுவதற்குக் காரணமாகும். குறை நீங்காத போது— நிறைவு என்னும் நிறை அமையாத போது அசுத்தமான அவா ஒழியமாட்டாது. குறை என்னும் குற்றமுடைய சீவர்களே ஆறறிவு பூரணம் பெறாத மாக்களும் ஆவர். மனிதர் எனப்படும் இரண்டு காற்பசுக்களை—படிப்பு செல்வம் அதிகாரம் என்பனவற்றால் உன்னத நிலையில் வீற்றிருப்போரை ஆறறிவுடையோர் எனப் போற்றுவர் உலகோர். இது வெறும் வார்த்தையேயன்றி — போலியான உபசார வார்த்தையேயன்றி வேறன்று. நிறை முறையான அருந்தல் பொருந்தல்களை அறியாமையால் ஐவகை வேட்கை என்னும் அசுத்த அவாவின் வசப்பட்டு அத்தகைய அவா சாங்காறும் நீங்கப் பெறாமையால் ஐயறிவும் பூரணப்படாத மாக்களே உலகில் பெரும்பாலார் என்பது உண்மையிலும் உண்மையே ஆம். அமல முதற்படி கண்டு ஆரோகணம் பெறுபவராகிய — அமலப் படியேற்றம் பெறுபவராகிய மெய்யடியார்க்குரிய விமலமான ஐயறிவுக்கும் அசுத்த தநுவினராகிய உலக மாக்களுக்குரிய அசுத்தமான ஐயறிவுக்கும் இடையீடு இனைத்து என இயம்ப ஒண்ணாது. ஆரோகணத்தோர்க்கு உரிய ஐயறிவோடு மதியும் பொலிவு பெற்றிருப்பதே ஆறறிவு பூரணம் பெறுதலாகும்.

குரு அருளால் பெறப்படும் உரிய சாதகங்களால்—தூல சூக்குமப் பயில்வுகளால் பௌதிகத் தூய்மை அடைந்த — சரீரமும் மனமும் தூய்மை அடைந்த—இருவினை ஒப்பு மல பரிபாகம் வாய்ந்த மெய்யடியாரே ஆறறிவு பூரணம் பெற்ற மானிடராவர். வேண்டியவற்றை எல்லாம் நிறை கண்டு கொண்டு உண்டு உபரதி பெறும் ஆற்றல் வாய்ந்தவராதலின், இவரே குறை இல்லாதவர்—குறை என்னும் குற்றம் இல்லாதவர் என அறிதற்பாற்று. இப்பெற்றி கைவரப் பெறாத உலக மாக்கள் எவ்வாற்றானும் குறையுடையவர்களே — குறை என்னும் குற்றமுடையவர்களே என்பதில் எட்டுணையும் ஐயப்பாடு ஆமோ? அன்று! அன்று!

சீவர்கள் தங்கள் தங்கள் குற்றங்களைத் தாங்களாகவே அறிந்து கொள்வது முடியாத காரியம். இஃது ஒரு கால் முயற்கொம்பு எனக் கூறப்படவும் ஆம். ஒவ்வொருவரும் தாம் தாம் குற்றம் இல்லாதவர் என்றே தம்மை மதித்து இதற்கு மாறாகப் பேசுபவரோடு எதிர்த்து வாதாடி சிலபல போலி நியாயங்களால் — தஸ்யுத்தன்மையுடைய பேச்சுக்களால் தம்மை அரண் செய்து கொண்டு அகம் பிரம சொரூபிகளாய் வதிவர். ஒவ்வொருவரும் தம் தம் குற்றங்களை அறியாத வரை பிறர் குற்றங்களைப் பார்ப்பதே — காண்பதே — பேசுவதே இயற்கையாகும். பிறர் குற்றங்களையே ஆராய்ந்து திரிபவர் தமது குற்றங்களை அறிதல் முடியாத காரியம். உலகில் மேதாவிகள் எனப் போற்றப்படும் லௌகீக தந்திர நிபுணர் லௌகீக விவகாரங்களில் முன்னிலையாரோடு நடமாடுங்கால் அவர் தம் குற்றங்களை — குறைகளை நோக்காது — பாராட்டாது அவர் தம் குணங்களையே பாராட்டி அவரை மகிழ்வித்துத் தம் கருமம் முடிப்பர். காரிய வாதிகளின் பண்பு இதுவே என்க. முன்னிலைகளில் குற்றம் கண்டு அக்குற்றங்களை அவர் வெறுப்படையும்படி பேசுதல் அம்முன்னிலைகள் பகைமை அடைதற்கும் அதனால் காரிய சித்தி இன்மைக்கும் ஏதுவாகும். உலகியலுக்கு ஒப்பிய "உடையது விளம்பேல்" என்னும் அமுதவாக்கின் எதிர் மறைப் பொருளில் இதுவும் அடங்கும். நற்குணங்

களையே பாராட்டுதலால் முன்னிலை யோர் மகிழ்ச்சி அடைவர். இதனுல் காரிய சித்தி உண்டு. பிறர் குற்றங் களையே கண்டு பாராட்டாத குணங் களையே — நற்குணங்களையே கண்டு — பாராட்டி யார்மாட்டும் பணிவுடை யவராய் அமைவோர் உலகினரால் பெருஞ் சுட்டுப் பெறுவர் — மதிப்புப் பெறுவர்.

## நீதிநெறிவிளக்கம்.

பிறரால்பெருஞ்சுட்டுவேண்டுவான்யாண் [டும்
மறவாதேநோற்பதொன்றுண்டு-பிறர்பிறர்
சீரெல்லாம்தூற்றிச்சிறுமைபுறங்காத்து
யார்யார்க்குந்தாழ்ச்சிசொலல்.

என்பது ஆன்ருேர் வாக்கு.

[சிறுமை = குறை — குற்றம். புறம் காத்தல் = புறத்தே கூருது மறைத் தல்.]

## குறள்.

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(ஷ 98-ம் அதி. பெருமை செ. 10)

என்றனர் பொய்யில் புலவர். பெரி யோர் பிறர் நற்குணங்களையே — பெருமையையே பாராட்டிக் குற்றங் களை மறைப்பர். சிறியோர் பிறர் நற் குணங்களை மறைத்துக் குற்றங் களையே தூற்றுவர் என்பது இதன் பொருளாகும். பெருமை சிறுமை என் னும் பண்புகள் அவற்றை உடையார் மேல் நின்றன.

சீவர்களுள்ளே குற்றம் இல்லாதவர் — குறை இல்லாதவர் யாருமே இல்லை. எனினும் ஐயறிவும் பூரணப்படாது மறத்தன்மையே மலிந்த — அசுத்த அவா மலிந்த மாக்கள்பால் குறைவே — குற்ற நிறையே மிகப்பெரிதாய் அமைந் திருக்கும். ஆதலால் அசுத்தமான பற் றுக் கோடுகள் ஒழிந்து உய்தியடைய விழைவோர் யார் மாட்டும் குற்றங் களைப் பாராட்டாது பணிவுடையராய் ஒழுகுவதே செயற்பாலது என்க. குற் றத்தையே கண்டு பாராட்டுவதால் நமக்கு உறவாவார் — சுற்றமாவார் யாரும் இல்லை. ஒப்புர வொழுகி உய்தியடைதலும் முடியாத காரிய மாகும்.

"குற்றமதுபார்க்குங்கால்சுற்றமில்லை"

என்னும் இவ் உண்மையையே வில்லிபுத்தூரரும் உலகியலுக்கு ஒப் பியவாறு விளக்கிக் கூறினர்.

## மகாபாரதம்.

பரிவுடன்மற்றிவைகூறும்பவனகுமாரனை [மலர்க்கைபணித்துநோக்கிக்
குருகுலத்தோர்போரேதேதுற்றமதுபார்க் [குங்கால்சுற்றமில்லை
ஒருகுலத்திற்பிறந்தோர்களுடன்வாழும் [வாழ்வினைப்போலுறுதியுண்டோ
இருவருக்கும்வசையன்ருேஇருநிலங்கார [ணமாகஎதிர்ப்பதென்ருன்.

(ஷ கிருட்டிணன் தூதுச்சருக்கம் செ. 17)

அறன் மகன் எனப் புகழப்பட்ட தருமன் கூற்ருக எழுந்த இச்செய்யு ளால் சுற்றம் எனப்பட்டோரில் குற் றம் கண்டு பகை கொள்ளாது அவரை உறவுபடுத்துவதே தகுதி என்பது நன்று வலியுறுத்துகின்றது. இவ்வாற் ருல் "குற்றம்பார்க்கில் சுற்றம் இல்லை" என்னும் ஔவை திருவாக் கின் உலகியலுக்கு ஒப்பிய பொருள் ஒருவாறு கூறப்பட்டது. மேல் இம் மந்திரத்தின் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருள் ஒரு சிறிது கூறி இக்கட் டுரை முடிக்கப்படும்.

வீடு பெறச் சமைந்தான் ஒருவன் குரு அருளால் முன்னிலைகளை நிறை கண்டு பஞ்சீகரணித்து உய்தியடை யாது அவற்றிற் குற்றம் கண்டு அவற் றைப் புறக்கணிப்பானுயின், அவனது கருவிகரணங்கள் — பொறி புலன் கள் என்னும் சுற்றம் வசப்படமாட் டாது — உறவு படமாட்டாது என் பது இவ் வேத மந்திரத்தின் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருளா கும். முன்னிலைகளை வெறுத்து ஒரு பால் ஒதுங்காது, அவற்றை நிறை கண்டு பஞ்சீகரணித்து உய்தியடை தலே நித்தியத்துவநெறி என்பது இது வரை "வித்தக" வாயிலாக வெளி வந்த கட்டுரைகள் பலவற்ருல் பிரபல சுருதிப் பிரமாணங்களோடு நன்று விளக்கி நிறுவப்பட்டது. ஒப் புரவு செய்தல் — துப்புரவு செய்தல் என்பனவற்றின் உண்மையும் இதுவே ஆம். முன்னிலையாய் விளங்கும் அசுத்த மாயா காரியமாகிய உலகமே— முன்னிலைப் பொருள்களே குற்ற முடையன என்பதும் நமக்குப் பகை யாய் உள்ளன என்பதும் வெள்ளிடை ஆம். நமது சரீரமும் அன்னதன்மை யதே. முன்னிலைகளால் துன்பம் விளைதலை எவரும் விரும்பார். ஆத லால் குற்றமாய் — பகையாய் உள் ளதை வசப்படுத்தவேண்டும் — உறவு படுத்தவேண்டும் என்க. நமக்குப் பகையாய் உள்ள முன்னிலைகளில் அப் பகைமையாகிய குற்றத்தைப் பொருட் படுத்தாது அவற்றை நிறை கண்டு பஞ்சீகரணித்து உறவு படுத்தவேண் டும். முன்னிலையை முன்னிலையாகிய சரீரத்தை — சரீரமாகிய உப்பில் இருக்கும் துப்பை — துப்பாகிய அசுத்த நிறையை அமலமாக்கி அச் சரீரமாகிய முன்னிலையை வசப் படுத்துவதே — உறவு செய்வதே துப்புரவு எனப்படுவது. நமது சரீ ரமாகிய உப்பில் மிகுதியாய் இருக்கும் கைப்பை — துப்பை — களிம்பை — குற் றத்தை குற்றமாகிய குறைவைப் பொருட்பண்ணுது அதனை அலட்சி யம் செய்தல் உய்யுந்திறன் ஆகாது. அச்சரீரத்தின் கண் உள்ள குறை என்னும் குற்றத்தை ஏற்ற — இன மான முன்னிலைப் பொருள்களால் மாற்றி அதனை அமலமாக விளக்க வேண்டும். அப்பொழுதுதான் அச் சரீரமாகிய கூடு — கூடாகிய வீடு அழிந்துபடாது நமக்குச் சுற்றமாகும் — உறவுபடும்; வீடு கைகூடும்; நித்தி யத்துவம் உளதாகும்—வாய்மையான

அறம், பொருள், இன்பம், வீடு அமைையும் என்க. தன் சரீர பௌதிக பஞ்சீகரணப் பெற்றிக்கு ஏற்ப அஃதாவது தன் சரீரத்தில் எவ் எப் பௌதிகம் எவ் எவ் ஏற்ற இறக்க நிறையாக — விஷமமாகப் பொலிந்திருக்கின்றதோ அவ் அவ் ஏற்ற இறக்க நிறையைக் குறைத்தும் கூட்டியும் சமஞ் செய்தற்கு ஏற்ற இனமான — காரமுள்ள முன்னிலைப் பொருள்களை அவற்றின் குற்றத்தை — குறையை நோக்காது நிறை கண்டு பஞ்சீகரணிக்கவேண்டும் — அருந்தவேண்டும். தன் சரீரத்துள்ள குற்றத்தை அழுக்கை, முன்னிலையில் சரமும் அசரமுமாய் விளங்கும் பொருள்களில் இனமானவற்றைக் கொண்டே அகற்றவேண்டும். அழுக்கை அழுக்காலன்றிப் பிறவாறு அகற்றுதல் முடியாத காரியம்.

## கருவூரார் பூஜாவிதி.

"..........................................................

தின்னுதவிடக்கெடுத்துத்தின்னச்சொன்
[னுள்......"

(ஷை செ. 27)

என்றனர் கருவூர்ச் சித்தர். போலிச் சமயிகள் சிலர் கொள்கைப்படி — போலிச் சாதிகள் சிலவற்றிற்குரிய ஆசாரப்படி நிஷேதம்—குற்றம் எனப்பட்ட விடக்கை, அத்தகைய குற்றம் என்னும் அறியாமைக் கூற்றை நோக்காது அருந்தியமை கருவூராரது சரீர பௌதிக பஞ்சீகரணிப்பின் விஷமத்தைச் சமப்படுத்துதற்கு —கருவி கரணங்கள் வசப்படுதற்கு ஏற்றவாறு அமைந்தமை காண்க. தொட்டவுடன் இனிக்கும் படியான — சுவைக்கும்படியான பதார்த்தங்களை உண்டு பின் வருந்துவதே சீவ இயல். குருநாதன் அருளும் விதியோ என்றால் தொட்டவுடன் எட்டிக் கசப்பும் பின் அழியாத பேரின்ப சுகத்தையும் தரவல்லதாகும். ஆதலால் குற்றம் உடையன —குறையுடையன என்று புறக்கணிக்காது முன்னிலைப் பொருள்களுள் நமது சரீர பௌதிக பஞ்சீகரண ஏற்றிழிவைச் சமப்படுத்தற்கு ஏற்றனவற்றையே அருந்தி உய்தி அடையவேண்டும் — பொறி புலன்களாகிய— கருவி கரணங்களாகிய—சரீரமாகிய சுற்றத்தை உறவுபடுத்தவேண்டும்—வசப்படுத்த வேண்டும் என்க. அருந்தல் பொருந்தல்களே தூலமான பயில்வுகள் எனப்படுவன. இவ் உண்மை அறியாதார் பலர் அருந்தல் பொருந்தல்கள் குற்ற முடையன என்று அவற்றை அறவே ஒழித்து —முன்னிலைகளில் குற்றம் கண்டு அவற்றிற்கு ஆற்றாது ஒருபால் ஒதுங்குவதே முத்திநெறி என்று குருட்டுத்தனமாக நம்பி அவமாகின்றனர். நிறைமுறை இல்லா அருந்தல் பொருந்தல்களே வேத நூல்களால் கண்டிக்கப்பட்டன ஆகும். முன்னிலையோராகிய உறவினர் – நண்பர்—பகைவர்—நொதுமலர் என்னும் யார்மட்டும், அவர் பால் உள்ள குறைவுகள் என்னும் குற்றங்களைப்பாராட்டாது நிறை முறையோடு ஒழுகி அவரை உறவு செய்யவேண்டும். திருவருணட்டத்தை அடிப்படையாகக் கொண்ட இன்னோரன்ன தூல சூக்குமப் பயில்வுகளால் மனமும் பொறி புலன்களும் தூய்மை அடைந்து வசப்படும் என்பது தத்துவப்பெரியார் துணிபும் வேத உண்மையும் ஆம்.

தன்னிலையும் முன்னிலையுமாய் விளங்கும் இவ்வுலகம் குற்றமயமே ஆதலால் சில முன்னிலைகளில் மட்டும் குற்றம் உளது எனத் துணிதல் அறியாமையே. தன்னிலையே முன்னிலையாதலால், ஒருவன் தன்குற்றத்தை —குறையை ஆராய்ந்து உணர்தல் வேண்டும். இப்பெற்றி கைகூடுவது என்றால் எளிதன்று; அநந்த சென்மங்களில் ஈட்டிய நல்வினைப் பயன் என்றே கூற ஆம். மணிவாசகப் பெருமானே,

## திருவாசகம்.

"எச்சம்அறிவேன்நான்எனக்குஇருக்
[கின்றதைஅறியேன்

அச்சோ! எங்கள்அரனே! ..............

.............................................................."

(ஷை உயிருண்ணிப்பத்து- செ. 9)

எனக் கூறியருளினர் என்றால், எம்போலிய உலக மாக்கள் எமது குற்றங்களை யாமாகவே அறிந்து திருந்துதல் முடியுங்காரியமாகுமா? (எச்சம் = குற்றம் — பிறர் குற்றம். எனக்கு இருக்கின்றது = எனது குற்றம்.)

## குறள்

ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்
[கிற்பிற்

தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.

(ஷை 19-ம் அதி. புறங்கூறாமை. செ. 10)

எனத்தேவர் கூறியதும் அறிக. பிறர் குற்றங்களை ஆராய்ந்து கண்டு புறங்கூறித்திரிபவர், பிறர் குற்றங்களைக் காணுதல்போலப் புறங்கூறல் முதலிய தமது குற்றங்களையும் காணவல்லராயின், அவர் தம் உடலோடு ஒழிவற ஒன்றி நித்தியத்துவம் பெறுதற்குரிய உயிருக்கு அக்குற்றம் என்னும் குறையாகிய அசுத்த நிறையின் ஆதிக்கத்தால் அவ் உடலை விட்டுப் பிரிதலாகிய சாக்காடு உளதாகுமா ?என்பது இதன் பொருளாகும். தமது குற்றங்களை அறியும் அவா வுடையராய்த் திருவருட் சகாயத்தால் அவற்றைக் கண்டு திருத்தம்பெறுவோர்—கருவி கரணங்கள் —பொறி புலன்கள் மாற்றமடையப் பெற்றோர் —யாற்றிப் பிறந்தோர் உடலும் உயிரும் ஒழிவற ஒன்றி நித்தியத்துவம் பெறுவார் என்னும் வேதவுண்மை இதனால் வலியுறுத்தப்பட்டது.

## திருவாசகம்.

"..........................................................

கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினா
[லாண்டுகொண்ட

திருத்துருத்தி மேயானைத் திக்குஞ் சிவ
[பதத்தை

.............................................................."

(ஷை கண்ட பத்து செ. 3)

என மணிவாசகர் அருளியதும் அறிக. "புலன்மாற்றினான்" என அப்பர் அருளியதும் அறிக.

ஒருவன் தன் குற்றத்தை—குறையை உணர்ந்துழி மனமுடைந்து வருந்துதல் — அவதியுறுதல் புண்ணியச் செயல் என்றே கூற ஆம். ஏனெனின், குற்றத்திற்காக வருந்துதலே அக்குற்றத்தை நீறச் செய்யும் உபாயம் ஆதலால் என்க. ஒருவன் பிறர் குற்றங்களையே கண்டு கோண்டு இருக்கும் வரை தன் குற்றங்களை அறிந்து திருந்துதல் முடியாத காரியமே. இப்பெற்றி உடையானுக்கு அவன் பொறி புலன்கள்—கருவி கரணங்கள் வசப்படமாட்டா; மனம் — வாசி — சரீரம் வசப்படமாட்டாது — நிலைப்படமாட்டாது என்க. ஆதலால் தன்பால் உள்ள குற்றங்களை அறியமுயன்று அவை தன்னை அணுகாதவாறு காத்துக் கொள்ள வேண்டும்.

## குறள்.

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை.

(ஷை 44-ம் அதி. குற்றங்கடிதல் செ. 4)

என்றனர் எமது பொய்யில் புலவர். ஒருவனுக்குச் சாதலை உளதாக்கும் பகை அவன்பால் உள்ள குற்றம் என்னும் குறைவே ஆம். ஆதலால் அக்குற்றமாகிய குறைவு தன்பால் உளதாகாவாறு அதனை உரிய சாதகங்களால் நிறைவுபடுத்தவேண்டும் என்பது இதன் பொருளாகும். காமம் கோபம் முதலிய குணங்கட்கு மூலமாய் நமது உடலுயிரில் உள்ள — உடலுயிராய் அமைந்த அசுத்த பஞ்சீகரண நிறையின் ஆதிக்கமே — பௌதிகங்களின் ஏற்றிழிவே — விஷமமே குற்றம் எனப்படுவது — குறை எனப்படுவது. அதுவே சாதலைத் தரும் பகை என்க. ஆதலால் பகையை நட்பாக்கிக் கொள்ளவேண்டும்.

தன்னிலை முன்னிலைகளாய் நம்மோடு தொடர்புடையனவே சுற்றம் எனப்படுவன. வினை ரூபங்களே — பொறி புலன்களே சுற்றம் என்பது,

"அருவினைச்சுற்றமும்மாண்டு"

(திருவாசகம் திருத்தெள்ளேணம்- செ. 11.)

என்னும் திருவாசக சுருதியாலும் "ஐம்புலக்கேளிரும் ஒருவாய்ப்புக்கன" என்னும் கல்லாடச் செய்யுட் பாகத்தாலும் நன்று வலியுறுகின்றது.

ஆதலால் இச்சுற்றங்களை உரிய சாதகங்களால் உறவுபடுத்த வேண்டும்.— மாற்றவேண்டும். அன்றேல் இவற்றை ஒழித்தல் — பாசங்கள் பற்றுக்கள் நீங்கி உய்தியடைதல் முடியாத காரியமே ஆகும்.

பிறர் குற்றங்களை ஆராய்ந்து கூறுதல் அவரைத் திருத்துதற்கு ஏற்ற செயலன்றோ? எனின், தனது குற்றங்களை அறிந்து தன்னைத் திருத்த முடியாதவன் பிறரைத் திருத்துவதென்பது வெறும் வார்த்தையேயாகும். இதுவே சுயநலம் கருதிய அகம்பிரமச் செயலும் ஆம். ஒருவன் தனது குற்றங்களை அறிந்து திருந்துதல் திருவருட் சகாயத்தாலன்றி —குருவருளாலன்றி முடியாத காரியமாம். ஒருவன் தன்னிலையைத் திருத்துவான் முயன்று தன் குற்றங்களை அறிய அவாவித் திருவருட் சகாயத்தால் அவற்றை அறிந்து உரிய சாதகங்களைக் கைக்கொண்டு மதிவைராக்கியம் என்னும் ஊன்று கோலைப் பற்றி, அறியாமை உருவமான இவ் அகில வசைக்கு சிறிதும் அஞ்சாது இகலுக்கு எதிர் சாய்ந்து ஒழுகினால் அவன் தன்னிலை திருத்தமடையும் — மாற்றமடையும். தன்னிலை திருந்துவதே மாற்றிப் பிறத்தலாகும். தன்னிலை திருந்திய போதுதான் முன்னிலையைத் திருத்தும் ஆற்றல் உளதாகும். இக்காலத் தன்றோ முன்னிலைகள் மயங்கிப் பிரமிக்குமாறு— கண்டு ஆனந்திக்குமாறு —கண்டு கலங்குமாறு —கலங்கிச் சாதலடையுமாறு — கா கூ என அலறிக் கதறுமாறு, ஞான சத்தியின் திவ்யகடாட்சத்தால், அரிய பெரிய சித்திகள் — அருட் சித்திகள் உளுற்றப் படும். இந்நிலை கைவரப் பெற்றவரே மூவுலகும் கோலோச்ச வல்லவர் — துட்ட நிக்கிரக சிட்ட பரிபாலகர் — அடி மன்னரும் முடி மன்னருமாகிய மெய்யடியார் என்க.

## குறள்.

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்[பின்
என்குற்ற மாகும் இறைக்கு.

(ஷை 44-ம் அதி. குற்றங்கடிதல். செ. 6.)

என்றனர் எமது பொய்யில் புலவர்.

தனது குற்றங்களாகிய குறைகளைக் கண்டு உரிய சாதகங்களால் அவற்றை நிறைவாக்கி, பின்பு பிறர் குற்றங்களையும் கண்டு கடியவல்லனாயின், அதனால் மெய்யடியானாகிய வாய்மையான மன்னனுக்கு ஆகும் குற்றம் யாது? என்பது இதன் பொருளாகும். பிறரைத் திருத்தி நன்னெறிக்கண் உய்ப்பதே தன்னைத் திருத்திக் கொண்ட மெய்யடியான் கடன் என்பது கருத்து. முன்னிலைகளில் — முன்னிலைப் பொருள்களில் குற்றம் கண்டு அவற்றைப் புறக்கணியாது, அம் முன்னிலைகளை நமது குற்றங்களை — குறைகளை நீக்குதற்கு — நிறைவாக்குதற்கு உரிய சாதனம் எனக் கண்டு, அவற்றை நிறை கண்டு பஞ்சீகரணித்து—உறவுபடுத்தி உய்தியடைய வேண்டும் எனவும், அன்றேல் கருவி கரணங்கள் — பொறி புலன்களாகிய சுற்றம் வசப்படாமையால் நாம் அவநெறிக்கே ஆளாக வேண்டும் எனவும், முன்னிலைகளை வெறுத்து ஒருபால் ஒதுங்குவதே முத்திநெறி என மூடத்தனமாகக் கருதும் ஒன்றும் போதா அறிவிலிகளாகிய நமக்கு உண்மையை உணர்த்துபவராய்,

"குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை"

(8-ம் பக்கம் காண்க.)

# உண்மை முத்திநிலை ஆராய்ச்சி மறுப்பு.

"வித்தக"ப் பத்திராசிரியர் எழுதியது.

(தொகுதி 2. 26-ம் வாரத் தொடர்ச்சி.)

மல பரி பாகம் பெற்ற போதுதான் பிணி மூப்பு முதலிய துன்பங்கள் நீங்கும் — மாற்ற மடையும்; பிணி மூப்புச் சாக்காடுகளுக்கு இடமாகிய அசுத்த காயப் பெண் விமல காயப் பெண்ணாக மாற்றமடைவள். அப்பொழுது எவ்வகையான உபாதியும் இல்லை. மலச் சிக்கல் இல்லை. பிணி இல்லை. அழிபசி உறுபசி என்பன இல்லை. நரை இல்லை. திரை இல்லை. மூப்பில்லை. சாக்காடு இல்லை. காமம் கோபம் முதலிய தீய குணங்களும் மாற்ற மடையும். முன்னிலையாவும் உறவுபடும். முன்னிலை தன்னிலைகள் ஒன்று படுதலாகிய வாய்மையான சந்தி வந்தனம் — சிவ பூசை அமையும். இடம் பொருள் ஏவல் வேண்டியவாறு அமையும். இவ் அரிய பெரிய நிலை கைவரப் பெற்ற மெய்யடியான் எவ்வகையான உபாதியும் இன்றிப் படியேற்றம் பெற்று தனது விமலமான உடலில் அருட் சத்தி என்னும் ஞான சத்தி அணு அணுவாகப் பதிதலாகிய சத்தி நிபாதம் பெற்று அவ் விமல உடலம் அமலமடைந்து ஞானசத்தி வடிவமாய் (ஓ வடிவம்) மாற்றமடைதலால் நித்தியத்துவம் பெறுவன். இதுபற்றியே மல பரிபாகம் முத்தி வாயில் எனப்பட்டது. இத்தகைய மல பரிபாகம் கைவரவேண்டும் எனப் பட்டினத்தடிகள் எம்பெருமானை வேண்டி இரங்கியமை பின் வரும் பாடலால் நன்று புலப்படும்.

### பட்டினத்தடிகள் பாடல்.

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியில்  
சாலவுபாதிபசிதாகமாமற்றைச்சஞ்சிதமாம்  
மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே  
ஆலமுகந்தருளம்பலவாவெனையாண்டருளே.

மல பரிபாகம் அடைந்தபோதுதான் இறைவன் திருவடி காணப்படும்; உடலில் அமல ஒளி ஆக்கமுறும். இது பற்றியே,

### திருவாசகம்.

"......வினையேன்அழுதால்உன்னைப்பெறலாமே"

(ஷை திருச்சதகம் ஆனந்தபரவசம் செ. 3)

என அருளிச் செய்தார் மணிவாசகப் பிரபு. அழுகை என்றால் என்னை? கண்களில் நின்று நீர் வடிதலை அழுகை என்பர். அஃதாவது சூக்கும தாதுக்கள் அக்கினியால் தகிக்கப்பட்டுக் கலங்க அவ் அக்கினி லலாடத்தைத் தாக்க அதனைச் சகிக்க ஆற்றாது கண்களில் நின்று ஊன் நீர் வெளிவருதலை அழுகை என்பர். உலகமாக்கள் தங்கள் தங்கள் ஆக்கம் கருதியும் தந்தை, தாயர், பெண்டீர், பிள்ளைகள், உறவினர் ஆக்கங் கருதியும் கேட்டான் வருந்தியும் நீலிக் கண்ணீர் வடித்துப் புலம்புவார்கள். மாணிக்கம் கூறிய அழுகை இதுதானா? இத்தகைய அழுகையாற்றானா மாணிக்கமணியாகிய நம் கண்மணி உடலுயிர் அமலமடைந்து "பல்லோரும் ஏத்தப் பணிந்து" வானிற் கலந்தான்? மிகச் சுலபமான காரியமன்றோ இது? சிரமமன்றிப் பயிலக்கூடிய சாதகமன்றோ இது? ஓ! ஓ! தத்துவப் பெரியாராகிய உத்தமரெல்லாம் மூதேவியால் ஆவேசிக்கப் பட்டு ஓவாது அழுதுகொண்டே இருந்தனரா? பளா! பளா! நன்று! நன்று! "அழுகை" என்பதற்கு உலகோர் கொள்ளும் போலிப் பொருள் இதுவே யாம்.

"ஆனால்வினையேன்அழுதால்உன்னைப்பெறலாமே"

என்று கூறிய மாணிக்கம் வாய்மையான அழுகை இன்னது என்பதனையும் அதனாற்றான் மல பரி பாகம் உளதாகும் – காயசித்தி உளதாகும் – காயம் அழுக்கு நீங்கி விமலமாய் அமலமாய் அதனுள் எம்பெருமான் குடிபுகப் பெறுதலால் நித்தியத்துவம் உளதாகும் என்பதனையும் கூறி விட்டான். பின் வரும் திருவாக்கு அழுகையின் பண்பும் பயனும் இன்னவை என நன்று வலியுறுத்துகின்றன.

### திருவாசகம்.

என்புள் ளுருக்கி யிருவினையை யீடழித்துத்  
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து  
முன்புள்ள வற்றை முழுதழிய வுள்புகுந்த  
அன்பின் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.

(ஷை குலாப்பத்து- செ. 3.)

இச் செய்யுளின் பொருள் முன்னர் விளக்கிக் கூறப் பட்டது. ஈண்டு அழுகை என்பது சரீரத்தில் உள்ள அழுக்கு நீங்குதலையே — மலம் விமலமாதலையே உணர்த்தி நின்றது. இவ்வுண்மையையே சித்தர் பெருமானாகிய இடைக்காடர் பின்வரும் சூத்தத்தால் கூறியருளினர்.

## மூவடிமுப்பது.

### ஒழிபு

### சூக்தம் 28 — அழுகை

உறுதுயர்தடக்குநர்பெருந்துணைஉய்வின்
மறமீர்கழுவாய்மறைநுவல்தொன்மொழி
இம்மூன்றுடைமையின்அழுகையும்இயலவே.

இங்கே அழுகை என்றது என்னை? உலக மாக்களுக்கு உரிய நீலிக்கண்ணீர் தானா இது? உலகமாக்கள் வடிக்கும் நீலிக்கண்ணீரை "உறுதுயர்தடக்குநர் உய்வின் பெருந்துணை" எனவும் "மறமீர் கழுவாய்" எனவும் "மறைநுவல் தொன்மொழி" எனவும் விதந்து கூறுதல் விந்தையினும் விந்தையல்லவா? ஐயாட்டைச் சிறார்கட்கு அல்லவா தகுதியுடையது இத்தகைய மதிப்பொலிவு? மருளுடம்பினராகிய சீவர்களுக்குரிய இந்த அழுகை என்னும் நீலிக்கண்ணீர் தானா முற் கூறிய மூன்று காரியங்களையும் அளிக்கும் ஆற்றல் உடையது? இந்த அழுகை இத்தகைய பயப்பாட்டினை உடையதாகுமா? இதனைத்தானா வேதம் முறையிடும் பழமொழி என்பது? ஈதென்ன அறியாமை! இன்னோரன்ன அரும் பொருள் பொதிந்த சூக்தங்களே "மூவடிமுப்பது" என்னும் தமிழ் மறையில் மிளிர்கின்றன என அறிதல் வேண்டும். காயத்துள்ள அழுக்கு (அழுகல் — அழுகை) என்னும் களிம்பு நீங்குதலால் அக்காயம் விமலமாய் (மல பரிபாகம் பெற்று) அமலமாய் நித்தியத்துவம் பெறவேண்டும்; அதுவே இயற்கை முறை என்பதே இச் சூக்தம் நுதலிய பொருளாகும். அழுகை அழுதல் அழுகல் என்பன ஒன்றே. இவை அசுத்தம் நீங்கல் — அழிதல் எனப் பொருள் படும். அழுகல் என்றால் ஊத்தை என்பர்; மலம் என்பர். அழுகல் அழுக்கு அசுத்தம் மலம் என்பன ஒன்றே. சாந்தோக்கிய சுருதி வற்புறுத்தியவாறு ஆகார பீஜ யோனி விவகாரத்தால் ("வித்தகம்" தொகுதி 1 இல 19 பார்க்க) அஃதாவது முன்னிலைகளை நிறை முறையோடு பஞ்சீகரணித்தலாகிய அருந்தல் பொருந்தல் அனந்தல்களால் உடலுயிரில் உள்ள மலம் பரிபாகமடைதலே — காயம் அழுக்கு நீங்கி வசப்படுதலே — காய சித்தி பெறுதலே — உடலுயிர் விமலமாய் அமலமாதலே அழுகை என்பதனால் போந்த பயனாகும். நிறை முறையான ஈவு ஏற்புக்களால் — வாய்மையான வாணிகத்தால் —வைசிய தருமத்தால் பழையன கழிதலும் புதியன புகுதலும் என்பதும் இதுவே ஆம். வாய்மையான இல்லற ஒழுக்கத்தானன்றி வாய்மையான பிரமசரிய ஒழுக்கத்தானன்றி, போலிப் பிரமசரியத்தாலும் சவிகற்ப நிர்விகற்ப நிட்டைகளாகிய உபாசக நிட்டைகளாலும் படிப்பு வல்லபத்தாலும் வேடம் பூசை கைசாடை கண்சாடை முதலிய நடை நொடிகளாலும் உடலுயிர் இயக்க ஒருப்பாடாகிய இருவினை ஒப்பு வாய்ந்து மலபரிபாகம் என்னும் கந்தழி சித்திக்கப் பெறுதல் முயற் கொம்பேயாகும்.

மேலே கூறியவாறு குருவருளால் பெறப்படும் வாய்மையான சாதகங்களால் — இயற்கையொடு தழீஇய ஒழுக்கங்களால் — ஒப்புர வொழுகுதலால் வாய்மையான இருவினை ஒப்பும் மல பரிபாகமும் கைவரப் பெறுதலே சிவ சம்பந்தம் என்னும் சிவமணம் பெறுதலாகும். உடலுயிர் விமலமானபோது — வாய்மையான துப்புரவு உளதாய போது அவமணம் என்னும் சவமணம் கமழாது; பூமணம் போலும் சிவமணமே கமழும். விமல பௌதிக மணமாகிய இதுவே வாய்மையான சாந்தம். இதுவே சுண்ணம். இதுவே சாம்பல்; அசுத்த பௌதிகம் சிவாக்கினியால் அசுத்தம் நீங்கி நீறினமையால் விமலமான சாம்பல் என்க. இதுதான் எம்பெருமான் செம்பவளத் திருமேனியில் மிளிரும் "சுண்ணவெண் சந்தனச் சாந்து" (அப்பர் தேவாரம்;) "சாந்தம் சுடுநீறு" (ஞானசம்பந்தர் தேவாரம்.) என்க. இத்தகைய நீற்றை — பொற்சுண்ணத்தை அடைதற்குரிய சாதகமே சுண்ணம் இடித்தல் என்பது. எம்பெருமான் தேவியும் தானுமாய் வந்து எம்மை ஆள வேண்டுமாயின் இத்தகைய செம்பொன் செய் சுண்ணம் இடித்தே ஆகவேண்டும்.

(தொடரும்)

(6-ம் பக்கம் தொடர்ச்சி)

என உண்மை நிலைக்கு ஒப்பிய வாறு கூறியருளினர் எமது பாட்டியார் என அறிதற்பாற்று. மேலும் விரிப்பிற் பெருகும்.

இதுகாறும் கூறியவைகளால் "குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை" என்னும் ஔவையார் அமுத வாக்கின் உலகியலுக்கும் உண்மை நிலைக்கும் ஒப்பிய பொருள் ஒருவாறு உணரத்தகும்.

சுபம்.

## பிழை திருத்தம்.

"வித்தகம்" தொகுதி 2 இல. 25.

| பக்கம். | பிரிவு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 5 | 3 | 40 | நெற்குகுத்து | நெற்குத்து |
| 4 | 1 | 33 | அம்மம்மா ! | அம்மம்ம ! |